24th September 1958]

(*b*) how many such schools were closed in 1957–58; and

(*c*) the reasons for closing them?

THE HON. SRI P. KANNAN : (*a*) 839 schools.

(*b*) Nil.

(*c*) Does not arise.

SRI M. JAGANNATHAN : தலைவர் அவர்களே, சென்னை மாநிலத்திலே, ஹரிஜன க்ஷேமநல பாடசாலைகள் இனிமேல் திறக்கப் படமாட்டாது என்ற கொள்கையை முடிவு செய்திருக்கிறார்கள். அதனால் ஹரிஜன மக்கள் பாதிக்கப்படும் நிலையில் இருக்கிறார்கள். ஆகவே இனி மேலும், ஹரிஜன க்ஷேமநல பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்த அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI P. KAKKAN : சர்க்கார் முடிவு ஹரிஜன மாணவர்களைப் பாதிப்பதற்காக இல்லை. ஹரிஜன மாணவர்களும், ஜாதி ஹிந்துப் பின்னினமாணவர்களும் சேர்ந்துப் படிப்பதனால், தீண்டாமையை ஒழிக்க முடியும் என்ற காரணத்திற்காகத்தான், புதிதாக ஹரிஜன வெல்பேர் டிபார்ட்மெண்டாரால் ஸ்கூல்கள் திறப்பதில்லை என்ற முடிவு செய்திருக்கிறது.

SRI R. SRINIVASA IYER : அமைச்சர் அவர்கள் சொன்ன பதிலிலிருந்து தீண்டாமையை விலக்க ஹரிஜன மாணவர்கள் ஜாதி ஹிந்துக்களோடு படிக்க வேண்டும் என்றதால், ஹரிஜன் பள்ளிக்கூடங் களுக்குப் பதிலாக, பொதுப் பள்ளிக்கூடங்கள் நியமிக்க சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : அப்படி இப்பொழுது ஒன்றும் இல்லை.

SRI M. P. PERIASAMI : இந்த ஹரிஜன லேபர் பாடசாலை நிறுவுவதில் ஜாதி ஹிந்துப் பிள்ளைகளும், ஹரிஜனப் பிள்ளைகளும் ஒன்றாகச் சேர்ந்து படித்து வருவதால், தீண்டாமை போகும் என்பது போல், ஹரிஜனச் சேரியில், ஜாதி ஹிந்துப் பிள்ளைகளும் வர சர்க்கார் அனுமதி கொடுக்குமா ?

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுதுகூட அப்படித்தான் நடக்கிறது சில பாடசாலைகள்.

SRI M. JAGANNATHAN : இப்பொழுது இருக்கும் பொதுப் பாட சாலைகளில் ஹரிஜனக் குழந்தைகள் தீண்டாமை காரணமாக சேர்க்கப் படுவதில்லை. குறிப்பாக எங்கள் ஜில்லாவைச் சொல்ல முடியும். ஒன்று தீண்டாமையை ஒழிக்க சர்க்கார் முன் வரவேண்டும், அல்லது ஹரிஜன மாணவர்கள் வர வசதி செய்து கொடுக்கவேண்டும், க்ஷேமநல, பாடசாலைகள் அதிகமாகத் திறக்க வேண்டும். இரண்டில் ஒன்றைச் செய்ய உறுதியாகச் சர்க்கார் முன்வருவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : அப்படி எந்த இடத்தில் இருக்கிறது என்று, குறிப்பாகச் சொன்னால், கவனிக்கப்படும்.

*Nagapattinam fishermen*

* 489 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Local Administration be pleased to state the various facilities provided for the fishermen living near Nagapattinam sea coast?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : A statement [a] is placed on the table of the House.

[a] Printed as Appendix II on pages 664–665 infra.

[24th September 1958

SRI N. K. PALANISAMI : நாகப்பட்டிணத்தில், அக்காரப் பேட்டை முதலிய 8 குப்பங்கள் இருக்கின்றன. அக்காரப் பேட்டைக்கு ஒரு பாப்லோ போட் கொடுக்கப்பட்டிருக்கிறது. மாதம் ரூபாய் 500 வருமானம் என்றும் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனாலும், 8 குப்பத்திற்கும், ஒரு போட்டுதான். ஆகவே, குப்பத்திற்கு இரண்டு வீதம் கொடுக்க சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : ஸ்டேட் முழுதுமே 42 போட்டுகள்தான் இருக்கின்றன. ஒவ்வொரு குப்பத்திற்கும் ஒன்று என்று கொடுத்துவிட்டால், மற்ற இடங்களின் கதி என்னுகும் ?

SRI A. VEDARATHNAM : நாகையில் விசைப் படகுகளை நடத்த பயிற்சி நடப்பதாகக் காண்கிறேம். அப்படி எத்தனை மாணவர்கள், பயிற்சி பெறுகிறார்கள், அவர்களுக்குப் பயிற்சிக்குக் கட்டணம் ஏதாவது உண்டா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அவர்களில் இந்த வருடம் பத்துப் பேர்கள் இருக்கிறார்கள். அவர்கள் மீனவர் சமுதாயத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்.

*Home Science and Citizenship Training Centre*

* 490 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்யத்தில் எந்தெந்த இடங்களில் ஹோம் ஸைன்ஸ், குடிமைப் பயிற்சி நிலையங்கள் நடைபெறுகின்றன ?

(ஆ) இவை ஒவ்வொன்றுக்கும் ஆண்டுதோறும் ஆகும் நடைமுறைச் செலவு எவ்வளவு, நிரந்தரச் செலவு எவ்வளவு ?

(இ) இதில் எவ்வளவு பேருக்குப் பயிற்சி அளிக்கப்படுகின்றது ?

(ஈ) எந்த ஜில்லாக்களிலிருந்து இந்த பயிற்சியாளர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றார்கள் ?

(உ) இவர்களின் தகுதி என்ன ?

(ஊ) அவர்களைத் தேர்ந்தெடுப்பவர்கள் யார் ?

(எ) இந்தச் செலவில் மத்திய சர்க்கார் பங்கு எவ்வளவு ?

(ஏ) இந்தப் பயிற்சி ஸ்தாபனங்களை அதிகரிக்கும் உத்தேசம் உண்டா?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) to (*h*) A statement [a] is laid on the table of the House.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : ஹோம் ஸைன்ஸில் என்ன வேலைகள் சொல்லிக் கொடுக்கப்படுகின்றன என்பதை அமைச்சர் அவர்கள் விளக்குவார்களா ?

MR. SPEAKER : தனிக் கேள்வி போடுங்கள். கேள்வி நேரத்தில் இதற்கெல்லாம் பதில் சொல்ல முடியுமா ?

*Maternity Home at Vedasandur*

* 491 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether a Maternity Home was constructed and finished on 1st April 1956 at Vedasandur, Madurai district ; and

(*b*) whether any doctor was posted for the Maternity Home?

THE HON SRI M. A. MANICKAVELU : (*a*) A Maternity Ward with four beds was constructed.

---

[a] Printed as Appendix III on page 666 infra.